# குரங்குகளும் தொப்பி வியாபாரியும்



ஓர் ஊரில்
தொப்பி
வியாபாரி
ஒருவர் வசித்து
வந்தார்.

அவரிடம்
வண்ண
வண்ணத்
தொப்பிகள்.
நிறைய
இருந்தன.

தொப்பிகளைக்
கூடை நிறைய
அடுக்கிக்
கொண்டு ஊர்
ஊராகச்
சென்று
அவற்றை
விற்பனை
செய்வார்.

அவரது
தொப்பிகளை
வேடிக்கை
பார்க்கக்
குழந்தைகள்
அனைவரும்
கூட்டம்
கூட்டமாகக்
கூடிவிடுவர்.



தொப்பி வியாபாரி ஊருக்குள் நுழைந்ததுமே தொப்பி வாங்கலையோ தொப்பி என உரக்கக் கூவுவார்.

அவரது சத்தத்தைக் கேட்டதுமே குழந்தைகளும் பெற்றோரும் தொப்பிக் காரரைச் சுற்றிக் கூட்டம் கூட்டமாக நிற்கத் தொடங்கி விடுவர்.

குழந்தைகள் எந்தத் தொப்பியைக் கேட்டாலும் தொப்பிக்காரரர் சிரித்துக் கொண்டே எடுத்துக் காட்டுவார்.



வழக்கம் போல் ஒரு நாள்

தொப்பிக்காரர் தனது தொப்பி வியாபாரத்தை முடித்துக் கொண்டு காட்டு வழியே நடக்கலானார். வெயிலின் சூடு கூடிக் கூடி வந்தது. அவருக்கு சற்று சோர்வு ஏற்படுவது போல் தோன்றியது.

சற்று நேரம் ஓய்வெடுத்து, களைப்பு மாறிய பிறகு பயணத்தைத் தொடரலாம் என நினைத்தார்.

அருகில் நிழல் தரும் ஒரு மரத்தைக் கண்டார்.



அவர் மெள்ள அந்த மரத்தின் அருகே சென்றார்.

தலையில் இருந்து தொப்பிக் கூடையை இறக்கி மரத்தின் அருகே வைத்தார்.

பிறகு மரத்தோடு மரமாகச் சேர்ந்து அமர்ந்து கொண்டு ஓய்வெடுக்கத் தொடங்கினார்.

அமர்ந்த சற்று நேரத்திலேயே களைப்பின் மிகுதியால் அவர் உறங்கிப் போனார்.

ஆழ்ந்த உறக்கம் அவரைத் தழுவியது.



மரத்தில் இருந்த குரங்குகள் கூடையில் உள்ள தொப்பிகளைக் கவனித்தன.

அவை மெள்ள மெள்ள மரத்தில் இருந்து கீழே இறங்கி வந்தன.

வண்ணத் தொப்பிகளை அணிந்து கொள்ள அவற்றிற்கு ஆசை வந்தது.

அவை அமைதியாகத் தொப்பிக் கூடைக்கு அருகே சென்றன.

தொப்பிக்காரர் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தார்.



குரங்குகள்
ஒவ்வொரு
தொப்பியாகத்
தொட்டுத்
தொட்டுப்
பார்த்தன.

பின்
தொப்பிகளை
எடுத்துத்
தலையில்
அணிந்து
அழகு
பார்க்கத்
தொடங்கின.

அவை

மகிழ்ச்சியின்
மிகுதியால்
துள்ளித்
துள்ளிக்
குதித்தன.

அங்கும்
இங்கும்
தாவித் தாவி
ஆட்டம்
போட்டன.

எங்கும்
குரங்குகளின்
கீச்சொலி
பரவியது..
பறவைகள்
பயந்து பறந்தன.



குரங்குகளின் கீச்சொலியைக் கேட்டு தொப்பிக் காரர் திடுக்கிட்டு எழுந்தார்.

குரங்குகள் தொப்பியை அணிந்து இருப்பதைக் கண்டு அவர் திடுக்கிட்டார்.

சுற்றிலும் நடப்பதை அவரால் நம்ப முடியவில்லை.

ஐயோ… இந்தக் குரங்குகள் எனது தொப்பிகளை எடுத்து அணிந்து கொண்டனவே இனி என்ன செய்வது என அவர் மிகவும் வருந்தினார்.



அவர் விழித்துக் கொண்டதைக் கண்ட குரங்குகள் ஆட்டத்தை நிறுத்தின.

பின் சற்று அமைதி ஆயின.

சடாரெனக் குதித்து மரத்தில் தாவித் தாவி ஏறின.

இதைக் கண்ட தொப்பிக்காரர் ஏமாற்றம் அடைந்தார்.

குரங்குகளிடம் இருந்து தொப்பிகளை எவ்வாறு வாங்குவது என அவர் ஆலோசிக்கத் தொடங்கினார்.



அன்பார்ந்த
குரங்குகளே...

எனது
தொப்பிகளைத்
திருப்பித்
தாருங்கள்...

தொப்பிகளை
விற்றால் தான்
என்னால்
பிழைப்பு நடத்த
முடியும்.

இந்தத்
தொப்பிகளை
நம்பித்தான்
எனது குடும்பமே
உள்ளது. என
வருத்தத்துடன்
கூறினார்.

தொப்பிக்
காரரின்
கண்களில்
இருந்து கண்ணீர்
வரத்
தொடங்கியது.

இதைக் கண்ட
குரங்குகள்
வருத்தம்
அடைந்தன.



ஒவ்வொரு
குரங்காக மரத்தில்
இருந்து இறங்கி
வந்தன. அவை
மெள்ள மெள்ள
கூடையின்
அருகே
சென்றன.

தமது தலையில்
அணிந்து இருந்த
தொப்பியைக்
கழற்றித்
தொப்பிக்
காரரிடம்
கொடுத்தன.

தொப்பிக்காரர்
தொப்பிகளை
ஒவ்வொன்றாக
வாங்கிக்
கூடையில்
அடுக்கினார்.

கீழே சிதறிக்
கிடந்த தொப்பி
களையும்
குரங்குகள்
எடுத்துக்
கொடுத்தன.

தொப்பிக் கூடை
மீண்டும்
நிரம்பியது.



தொப்பிக் காரரின் மகிழ்ச்சி அடைந்தார்.

தொப்பிகள் நிறைந்த கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு மீண்டும் நடக்கத் தொடங்கினார்.

குரங்குகள் ஆட்டம் போட்டுக் கொண்டே கைகளை அசைத்து வழி அனுப்பி வைத்தன.

பட உதவி AI

படைப்பு : மு.கிருஷ்ண மூர்த்தி